உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# முத்திரை.

முத்திரை யென்பது சூலக்குறி. பண்டைக்காலத்து அரசர்போர்க் களத்துப் பெற்ற தமது மார்பின் சூலக்குறியை மோதிரத்திலமைத்துக் கைச்சாத்து முதலியவற்றில் பொறித்துக்கொண்டு வந்தமையால் அதற்கு முத்திரையெனப் பெயர் வந்தது. ஏற்கம்

முத்தல மென்பது முத்தரம், முத்தரை, முத்திரை என வழிவழித் திரிந்தது. முத்தரம் - முத்ர தலமென்பது மூங்கிலையையும் மற்றைய இலை முதலியவற்றையும் உணர்த்தி நிற்கும்.

மூங்கிலை அச்சவடிவாயும் கூர்மையாயும் இருத்தலால் அவ்விலைபோல் இரும்பினால் மூன்று வடிவமாகச் செய்யப்பட்ட ஆயுதத்திற்கு முத்தல மென்பது பெயர்; இதுவேசூலம், பிறகு முத்தல மென்பது முத்தலையாயிற்று.

முத்தலைவேல் = மூவிலைவேல்.
முத்தலைவேலோன் = சிவன், வயிரவன்.

"காள நல்வசி சூலம் கழுமுள்
மூவிலைவேலே முத்தலைக் கழுவெனல்"

என்ற சூலத்தின் பெயருள் மூவிலைவேல், முத்தலை என்பவற்றானும் தெளிந்துகொள்க, மூவிலைவே லென் பதுள் இலை மூங்கிலை யென்பதே பொருள்.

"நவிரேதி நாட்டம் கடுத்தலை நாந்தகம்
வசியே கட்கம் வஞ்சம் காளே". (பி - தி)

என்ற வாளின் பெயருள் கடுத்தலை யென்பதற்குக் கூரிய மூங்கிலிலை போல்வதென்றே பொருள் கொள்ள வேண்டும். மூங்கிலைகளுக்குள்ளது. கரண

"முன்னளந்த மூவர்க்கும் மூதலானான் காண்
மூவிலைவேற் சூலத்தெங் கோலத்தான் காண்." (திருக்கோகரணம் அ - தே)

தலமென்னுஞ் சொல் இலையென்னும் பொருளில் பழந்தமிழி லிருந் தது. வழுதலை யென்பது முதல் பார்ப்பார முள்ளியையும் பிறகு இன மாகிய கத்தரி முதலியவற்றையும் உணர்த்தும்.

வழுதலை = முள் நிறைந்த இலைகளையுடையது
வள் = கூர்மை.
தலம் = இலை.
வளுதலம் - வழுதளம் - வழுதணம் - வழுதணை -
- வழுதுணை = கத்தரிக்காய்.

"வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும் " (ஔவைபாடல்)
தண்டலை = சோலை, பூந்தோட்டம், ஊர்.
தண்டலம் தண்டலையாயிற்று.
தண்டலம் = சோலை, குளிர்ந்த இலைகளையுடையது.

தண்டலம் ஓர் ஊருமாம்.
தலம் - தளம் - தளிர் - தளிர்த்தல்
தளம் - தளை - தழை - தழைத்தல்

கீரை தளதளென வளர்கின்றது.

"தளங்கிளருந் தாமரையா தனத்தான் கண்டாய்" (அ - தே).

இதனால் தலமென்னும் சொல்லுக்கு இலையென்னும் பொருளுண்டென்பது துணிபாயிற்று.

தலம் = மூங்கில், இலை துளை முதலியன.

இனி சூலத்தை யுணர்த்தும் முத்தலையென்பதற்கு மூங்கிலிலைபோல் வதென்னும் பொருளே துணிபாகின்றது. இம் முத்தலை யென்பது முத் தரை முத்திரை யென்றாய்ச் சூலக்குறியையும் அடையாளத்தையும் உணர் த்தும். இதுவே முதல் முதலுண்டாயது. முத்திரைக்கோல், முத்திரைப் பலகை, முத்திரைக்கல், முதலியவற்றானும் தெளிக்.

"பெருமுத்தரையர் பெரிதுவந்தீயும்
கருணைச் சோறார்வர் கயவர். (நாலடியார் - தாளாண்மை)

'நெல்'கூர்ந்தக் கண்ணும் பெருமுத்தரையரே
செல்வரைச் சென்றிரவாதார். (நாலடியார் - மானம்)

எபெவற்றுள் முத்தரையர் என்பது முத்தலையரென்பதன் திரிபு.

லகரம் ரகரமாயிற்று. முத்தலையரென்பதற்குச் சூலத்தால் குத்திப் பொருதவல்லா ரென்பது பொருள்.

# முத்திரை

இம்முத்தரையர், பாளையகார வகுப்பினைச் சேர்ந்தவர்கள். பாளைய காரராவார் அரசர்க்குக் கீழ்ச் சில சேனையோடும் ஒவ்வோர் புறங்களுக்கு அதிகாரிகளாக இருப்போரும், கூடாரத்தி லிருப்போரும், படைத்தலைவரு மாவார். இவருட்சிலர் ஊர்காவலருமாவார். ஊர்காவல ரெனினும் தலை யாரி யெனினும் ஒக்கும். இவர்களுக்கு முத்திரிய ரென்னும் பெயருண்டு.

முத்தலையா ரென்பது தலையாரி யெனவும், முத்தரைய ரென்பது முத்திரிய ரெனவும் திரிந்தன.

முத்தலையார் = சூலத்தாற்குத்திப் பொருதவல்லார்.

இவர்கள் ஊக்கமும் வஞ்சமும் ஒருப்பாடு முள்ளவர்கள். வாய்ப் புழிக்கொலை செய்வதற்கும் அஞ்சார். இவர்கள் சூழ்ச்சியைத் தேவர் களும் அறியார். இவ்வகுப்பாருள் பொருது வென்று ஊர்ப்பரிசு முதலி யன பெற்றார் செல்வராயினர். அதனால் முத்தரைய ரென்பதற்குப் பெருஞ்செல்வ ரென்னும் பொருள் வழக் குண்டாயிற்று. இவர்கட்குக் கோட்டை முதலியன வுள்ளன. இவர்களை ஒருவரும் எதிர்க்கலாகாது எதிர்க்கின் அவர் தலை போய்விட்டது. பழைய பாளையபட்டைச் சார்ந்த கிணறுகளை ஆராயின் அவற்றுள் மனி தருடைய மண்டைகளே கிடைக்கும் "வீரன்கேண்மை கூரம்பாகும்."

## மோதிரம்.

முத்தரம் என்பது மோதிரம் - மோதிர மென்றாய்ச் சூலக்குறி பொறித்த விரலணியை யுணர்த்தும்.

பிறகு மோதிர மென்பது பொதுப்பெய ரானமையின் முத்திரை மோதிர மெனப்படலாயிற்று.

கணையாழி; கணை = அம்பு. அரசன் தனது மார்பின் அம்புக்குறிப் பொறித்த மோதிரமென்பது பொருள்.

மோதிரம் = சூலக்குறியுள்ளது. கணையாழி = அம்புக்குறி யுள்ளது.. தம்முள் வேறுபாடுணர்க.

மோதிரம் முற்பட்ட வழக்கு; கணையாழி பிற்பட்டவழக்கு..

முத்திரையை யுணர்த்தும் சாபா என்பதற்கும் விற்குறி - - புடைய தென்பதே பொருள். சாப = வில்.

விற்குறி யெனினும் அம்புக்குறி யெனினும் ஒக்கும். பிறவும் ஆராய்ந் துணர்ந்து கொள்க.

